2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

### "முன் மாதிரி" அமைச்சர்

பம்பாய், ஏப். 28—

மகாராஷ்டிர மாநிலத்தில் மின்சார பற்றுக்குறை உள்ளது. எனவே, வீடுகளில் உபயோகிக்க மின்சார அளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆனால், அம்மாநில மின்சார அமைச்சர் சாபத்ரா தனது வீட்டிற்கு அனுமதிக்கப்பட்ட அளவிற்கு மேல் மின்சாரம் உபயோகித்துள்ளார். இதனால் மின்சார ஊழியர்கள் அவரது வீட்டிற்கான மின்சாரத் தொடர்பை துண்டித்துவிட்டனர். பின்பு குறிப்பிட்ட காலத்திற்கு பிறகே, மின்சார தொடர்பு கொடுக்கப்பட்டது.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 3-5-75 சனி மலர் 77

### சுப்ரமண்யத்தின் கைவிரிப்பு

பம்பாய், ஏப். 29—

மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையான பஞ்சப்படி கோரி மகாராஷ்டிரா மாநில அரசு ஊழியர்கள் போராடுகின்றனர் அல்லவா? இக்கோரிக்கையை பரிசீலிக்குமாறு அம்மாநில முதலமைச்சர் மத்திய அரசு நிதியமைச்சர் சுப்ரமண்யத்துக்கு தெரிவித்தார் அவ்வூழியர்களின் கோரிக்கைகளை ஏற்பதற்கில்லை என மத்திய நிதி அமைச்சர் அம்மாநில முதலமைச்சரிடம் தெரிவித்துவிட்டாராம்.



வியத்நாம் தலைவர் ஹோ-சி-மின்

## அரைகுறையாய் விடாதே அடியோடு ஒழித்துக்கட்டு

காலனியாதிக்கம் என்பது ஓர் இராட்சசப் பேய்ச் சிலந்தி [ஆக்டோபஸ்] போன்றது.

அதன் ஒருகால் பெரும் நகரங்களில் வாழும் பாட்டாளி வர்க்கத்தையும், மற்றொருகால் காலனிகளிலுள்ள பாட்டாளிகளையும், சுற்றிப் பின்னியுள்ளது. அந்த ஆக்டோபஸைச் கொல்லவேண்டுமெனில் அந்த இரு கால்களையும் வெட்டி எறியவேண்டும், அவற்றில் ஏதேனும் ஒன்றை மட்டும் வெட்டினால், மற்றொன்று தொடர்ந்து பாட்டாளிகளின் இரத்தத்தை உறிஞ்சிக் கொண்டேயிருக்கும். அந்த அக்டோபஸ் உயிருடனிருந்து கொண்டே, வெட்டியெறியப்பட்ட காலை மீண்டும் வளர்த்துக் கொள்ளும்'

## உயிரினுமினியது நாடு

"சுதந்திரத்தையும், விடுதலையையும் விட மதிப்பு வாய்ந்தது வேறு ஒன்றுமில்லை. நாம் அனைத்தையும் வேண்டுமானால் இழந்துவிடலாம். ஆனால் நாட்டை இழந்து அடிமைகளாய் வாழ்வதென்பது முடியாது"

— ஹோ-சி-மின்.



புரட்சி அரசின் ஜனாதிபதி லிகு-யென்-ஹூ-தோ.

## உலகப் பாட்டாளிகளுக்கு வியட்நாம் மக்கள் அளித்த மேதினப் பரிசு

# சைகோன் நகரை விடுதலைப்படை விடுவித்தது

## 30 வருட அமெரிக்க ஆக்கிரமிப்பின் தலையில் இடி விழுந்தது




சைகோன், மே. 2—

**"சண்டையை நிறுத்திவிட்டோம்! சமாதானக்கொடி தூக்கி விட்டோம்! அதிகாரத்தைஒப்படைக்க கைகட்டிகாத்திருக்கிறோம்"—என்று தென்வியட்னாம் புதிய அதிபர் பிக்மின் வானொலியில் அறிவிக்க தென்வியட்னாம் புரட்சி அரசின் தேச விடுதலைப்படைகள் சைகோன் மாநகருக்குள் வெற்றி முழக்கத்துடன் பிரவேசித்தன.**

கம்போடிய 'கேமர்' அணி படைகள் கம்போடிய வெற்றியை உலகத் தொழிலாளி வர்க்கத்திற்கு மே தினப் பரிசாக கொடுத்தது போலவே-தென்வியட்னாம் தேச விடுதலைப் படைகளும், இதோ எங்களுடைய மே தினப் பரிசையும் அளிக்கிறோம் என்று தென்வியட்னாம் வெற்றியை பரிசாக அளித்துள்ளனர்.

தென்வியட்னாம் அதிபர் பிக்மின் தென்வியட்னாம் புரட்சி அரசிடம் சரண் அடைந்து விட்டார். தென்வியட்னாம் படைகள் துப்பாக்கிச் சூட்டை நிறுத்தி அந்தந்த இடங்களிலேயே வெள்ளைக் கொடியைப் பறக்கவிட வேண்டுமென்றும் உத்தரவிட்டார்.

அனாவசியமாக இரத்தம் சிந்துவதை நிறுத்தும் பொருட்டு, அதிகாரத்தை புரட்சி அரசிடம் ஒப்படைக்கக் காத்திருப்பதாகவும் சைகோன் வானொலியில் பிக்மின் கூறினார்.

அமெரிக்கக் கைக்கூலியான துரோகி தியூ ஓடிப்போன பிறகு, புதிதாக வந்த பிக்மின் அரசு, சீக்கிரமே சமாதான சமரச முயற்சிகளில் இறங்கிற்று. தென்வியட்னாம் படைகள் வெள்ளைக் கொடி தூக்கிவிட வேண்டுமென்று அதிபர் பிகமின் உத்தரவிட்டது போலவே, புதிய பிரதமர் வூ வான் மாவும் உத்தரவிட்டார்.

அதன்படி, உதவி சேனாதிபதி நிகுயென்ஹூ ஹான் தென்வியட்னாம் தளபதிகளுக்கும் படைகளுக்கும் போரை நிறுத்துமாறு உத்தரவு பிறப்பித்தார். இரத்தம் சிந்தாமல் தென்வியட்னாமிய தளபதிகள் அனைவரும் புரட்சி அரசு தளபதிகளிடம் சரணடைந்துவிட வேண்டுமென்றும் உத்தரவிட்டார்.

தென்வியட்னாம் தளபதிகளும், "ஆயுதம் பணிவதைத் தவிர. வேறு வழி இல்லை" என்று கூறி சரணடைய முன்வந்தார்கள்.

### இருபத்திநாலு மணிநேரத்தில் அமெரிக்கர் ஓடிவிடணும்

ஏப்ரல் 29-ம் தேதியன்று புரட்சி அரசின் வானொலியில் "சைகோனிலுள்ள அமெரிக்கர்கள் அனைவரும் 24 மணி நேரத்தில் வெளியேறிவிட வேண்டும்"—என்று ஒலி பரப்பியது புதிய அதிபர் பிக்மின்னும் புரட்சி அரசு சொற்படி, உடனே அமெரிக்கர்களெல்லாம் வெளியேறிவிடவேண்டும் என்று உத்தரவு பிறப்பித்தார்.

அமெரிக்கர்கள் நாட்டைவிட்டு ஒரே நாளில் வெளியேறினால்தான், விடுதலைப் படைகளின் தாக்குதல் நின்று போர் நிறுத்தம் ஏற்பட முடியுமென்று கூறி, வெளியேற்ற உத்தரவு போட்டார்.

### நிபந்தனையின்றி சரணடை அரசையும் படையையும் கலை

பிக்மின் அரசின் போர் நிறுத்தம் பேச்சுவார்த்தை முயற்சிகளை புரட்சி அரசு ஏற்கவில்லை. நிபந்தனையின்றி சரணடைய வேண்டுமென்று புரட்சி அரசு வற்புறுத்தியது.

புரட்சி அரசு 3 நிபந்தனைகளை விதித்தது.

1. அமெரிக்கர்கள் அனைவரையும் வெளியேற்றவேண்டும்.
2. சைகோன் அரசைக் கலைத்து விட வேண்டும்.
3. சைகோன் படைகளையும் கலைத்து விட வேண்டும்.

காரணம், சைகோன் அரசு அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் காலனி பாதிக்கச் சூறையாடலுக்கு உடந்தையாக இருந்த அரசு. எனவே, அந்த அரசைக கலைத்து விட வேண்டும்.

அதுபோல வியட்னாமின் ஒற்றுமைக்கும் அமைதிக்கும் சுதந்திரத்துக்கும் உலை வைத்து, சகோதரப் படுகொலைகளை நடத்தி வந்த அமெரிக்க கூலிப் படைகளான சைகோன் இராணுவ இயந்திரத்தையும் கலைத்துவிட வேண்டும் என்று புரட்சி அரசு வற்புறுத்தியுள்ளது.

### கெடு முடிவதற்கு முன்னே ஓட்டமெடுத்தது அமெரிக்கா

24 மணி நேரத்துக்குள் அமெரிக்கர்கள் வெளியேற வேண்டுமென்று ஏப்ரல் 29ந் தேதி காலை 9-30 மணிக்கு புரட்சி அரசின் வானொலி பேசியது என்றால், மறுநாள் 30-ந் தேதி காலை 9-30 மணி ஆவதற்கு முன்னாலேயே, இரவு முழுவதும் ஹெலிகாப்டரில் ஏறி ஓடியவண்ணமாக இருந்தார்கள் அமெரிக்கர்கள்.

கெடு முடிய பலமணி நேரத்துக்கு முன்னாலேயே அமெரிக்க தூதர் கிரஹாம் மார்ட்டின் உட்பட குடல் பதறி ஓடிவிட்டார்கள்.

புரட்சிப்படைகளின் ராக்கெட் குண்டுகள் கக்கும் நெருப்பு மழை ஒருபுறம்—புதிதாககோபாவேசம்கொண்டதென்வியட்னாம்படைகள் பாய்ச்சும் துப்பாக்கிக்குண்டுகள் மறுபுறம் — இதற்கிடையே சிக்கிய அமெரிக்க ராணுவ ஆலோசகர்களும் அமெரிக்க உளவாளிகளும் தூதரக அதிகாரிகளும் விமானங்களிலும் ஹெலிகாப்டர்களிலும் ஏறி தலைவிரிகோலமாய் தப்பி ஓடினார்கள்.

ஹெலிகாப்டர்களும் கூட, அமெரிக்க தூதரகக்கட்டிடத்தின் மொட்டைமாடியில் வந்திறங்கி, அமெரிக்கக்குப்பைகளை வாரிக் கொண்டு மேகத்தில் மறைந்தன.

சைகோனிலுள்ள அமெரிக்க தூதரகக் கட்டிடத்துக்குள்ளிருந்து, கட்டிடமே தீப்பற்றி எரிவதுபோல புகைச்சுருள்களும் காகிதச்சாம்பல்களும் ஆகாயத்தில் எழும்பின. தென்வியட்னாம சமாதானவாதிகள, ஜனநாயக வாதிகள், புரட்சிக்காரர்கள், மாணவர் தலைவர்கள் ஆகியோர் பற்றிய குறிப்புகளையும, இதுவரை நடத்தி வந்த படுகொலைகள் பற்றிய குறிப்புகளையும், சதித்திட்டங்களையும லங்காதகனம் செய்ததினால் எழுந்த புகைச்சுருள்களும் காகிதச்சாம்பல்களும்தான் அவை.

### படைகளுக்கு வீர வரவேற்பு

வடவியட்னாம் சிப்பாய்களும் புரட்சி அரசின் படைகளும் சைகோன் நகருக்குள் ஏப்ரல் 30ம் தேதியன்று வெற்றி முழக்குடன் பிரவேசித்தன. விடுதலைப் படைகளின் டாங்கிகள், துதிக்கை போன்ற தமது நீண்ட பீரங்கிகளை மேலுயர்த்தி, டுமீல் டுமீல் என்ற வெடியோசையுடன் நகருக்குள் புகுந்து அதிபர் மாளிகையை நோக்கி வந்தபோது, சைகோன் மாநகரத்தின் புத்தமதத் தலைவர்களும் கத்தோலிக்கர்களும், மாணவர்களும் வாலிபர்களும் அந்தடாங்குகளைச் சுற்றி ஆடிப்பாடி கோலாகலமாக வரவேற்றார்கள்.

சைகோன் நகரின் அரசாங்க அலுவலக மாடிகளிலெல்லாம் வெள்ளைக் கொடிகள் பறந்து கொண்டிருக்கின்றன.

பச்சை சட்டை தென்வியட்னாம் கூலிப் படைகள், தங்கள் ஆயுதங்களை விடுதலைப் படையின் டாங்குகள் முன்னால் ஒப்படைத்து விட்டன.

### பாரிஸ் உடன்படிக்கையை அமெரிக்கா மதிக்கவேண்டும்

கடந்த 28ம் தேதியன்று வடவியட்னாம் படைகளும புரட்சி அரசுப் படைகளும் சைகோன அதிபர் மாளிகை மீது குண்டுமாரி பொழிந்து கொண்டே, அமெரிக்காவுக்கு எச்சரிக்கையும் விடுத்தது

அதாவது 1973-ல் ஏற்பட்ட பாரிஸ் உடன்பாட்டின்படி தென்வியட்நாம் மக்களின அடிப்படை உரிமைகளை அமெரிக்கா அங்கீகரிக்கவேண்டும்,

அந்த உடன்பாட்டின் முதல் ஷரத்தில் வியட்னாம் பற்றி 1954-ல் ஜெனீவா நகரில் ஏற்பட்ட உடன்பாட்டின்படி வியட்னாம் நாட்டின் சுதந்திரத்தையும் அரசுரிமையையும, ஐக்கியத்தையும், பிரதேச ஒருமைப்பாட்டையும, அமெரிக்காவும் இதர எல்லா நாடும் மதித்து நடக்க வேண்டும்.

பாரிஸ் உடன்பாட்டின் 4-வது ஷரத்தில், தென்வியட்னாமின் உள் விவகாரங்களில் அமெரிக்கா தொடர்ந்து பங்கு கொள்ளுவதையும் தலையிடுவதையும் நிறுத்திக்கொள்ளவேண்டும்-என்று இருக்கிறது. அதை அமெரிக்கா ஒழுங்காகக் கடைப்பிடிப்பதுதான் அதன் மானமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளும் ஒரே வழி என்று கூறியுள்ளது

புரட்சி அரசின் வெற்றியினால் அமெரிக்காவின் தலையீடுகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டுவிட்டது.

### வியத்நாம் வெல்வது திண்ணம் அமெரிக்க தோற்பது உறுதி

தேசியவிடுதலைக்காக அமெரிக்க ஆக்கிரமிப்பை எதிர்த்து நடைபெறும் போராட்டத்தில் நாம் மேலும் அதிக கஷ்டங்களையும் துன்பங்களையும் ஏற்கவேண்டியிருந்தாலும் மேலும் தியாகங்கள் செய்ய வேண்டியிருந்தாலும் -நாம் பூரண வெற்றி பெறுவது நிச்சயம்,

அமெரிக்க ஆக்கிரமிப்பை முறியடித்த பின்னர் இப்போதிருப்பதைவிட பத்து மடங்கு பலமுள்ளதாக நம் நாட்டை நாம் புனரமைப்போம்.

துன்பங்களை எதிர்நோக்கியிருந்தபோதிலும் நம் மக்கள் நிச்சயமாய் பூரண வெற்றி பெற்றே தீருவர் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் வெளியேறியே தீரவேண்டும். நம் தாய்நாடு ஒன்று படும். வடக்கிலும் தெற்கிலுமுள்ள நம் மக்கள் ஒன்று சேர்க்கப்படுவர்.

சிறிய நாடாக இருந்த போதிலும் பலம் பொருந்திய ஏகாதிபத்தியவாதிகளை பிரெஞ்சு அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளை—உறுதியுடன் முறியடித்து உலக முழுவதிலுமுள்ள தேசிய விடுதலை இயக்கத்துக்கு அரிய பணியாற்றியுள்ளோம் என்ற பெரும் கௌரவம் நம் நாட்டுக்குச் சேரும்.

—டாக்டர் ஹோ-சி-மின்-னின் உயிலிலிருந்து

## மற்றுமொரு அமெரிக்க கைக்கூலி வம்புக்கு இழுக்கிறான்

சியோல், ஏப்.29—

இந்தோ-சீனாவில் கம்யூனிஸ்டுகள் வெற்றி பெற்றதன தொடர்ச்சியாக தென்கொரியா மீது வடகொரியாவின் ஆக்கிரமிப்பு அபாயம அதிகரிக்கிறது என தென்கொரிய ஜனாதிபதியும் அமெரிக்க அடிவருடியுமான பார்க்-சங்-ஹூ ஓலமிட்டுள்ளான்.

மேலும் அப்படியொரு தாக்குதல் நடக்குமானால் அது வடகொரியா தன்னைத் தானே அழித்துக்கொள்வதுஎன எச்சரிக்கிறோம.

டெலிவிஷனில்பேசிய அந்த அமெரிக்க கைக்கூலி மேலும் இந்தோ-சீனாவில் (கம்போடியா—வியட்னாமில்) கம்யூனிஸ்டுகள் பெற்ற வெற்றி வட கொரியாவிற்கு ஊக்கமளித்து இருக்க வேண்டும் என்றும் இந்தோ-சீனாவில் விடுதலைப் படைகள் கையாண்ட தந்திரங்கள் தென்கொரியாவிலும் வெற்றியை அளிக்கும என்று வடகொரியாவின நம்பிக்கையை பலப்படுத்தியிருக்க வேண்டுமென்றும் ஒப்பாரி வைத்துள்ளான்.

மேலும மக்கள்சீனத்திற்கு சமீபத்தில் விஜயம செய்த வடகொரிய ஜனாதிபதி கிம் இல் சுங் தென்கொரியாவை எடுத்துக்கொள்வது பற்றி சீனத்துடன் திட்டம் வகுத்திருப்பாராம.

தீக்கதிர்

# 'அவசரகால நிலைமையும்' "உள்நாட்டு பாதுகாப்பு சட்டமும்"

குஜராத்தில் தேர்தல் நடத்த வேண்டுமென்றும் 'அவசர கால நிலைமை'யை ரத்து செய்யவேண்டுமென்றும் இரு கோரிக்கைகளை மொரார்ஜி தேசாய் தனது உண்ணாவிரதத்தில் கிளப்பினார். இதில் முதல் கோரிக்கை மட்டுமே வழங்கப்பட்டு உண்ணாவிரதம் நின்றது. 'அவசரகால நிலையை நீடிக்கவேண்டிய அவசியத்தை மொரார்ஜி தேசாய் உணர்ந்ததாகப் பொருள் படும்படி பிரதம மந்திரி அறிக்கை விட்டார். இந்த விஷயத்தில் மேலும் பேச்சு நடத்திக் கொள்ளலாமென்று மொரார்ஜி அறிக்கை வந்தது.

உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம் ('மிசா' சட்டம்) துஷ்பிரயோகம் செய்யப்படமாட்டாது என்று அந்த சமயத்தில் வாக்குறுதி அளித்த பிரதம மந்திரி அச்சட்டம் 'நியாயமான அரசியல் நடவடிக்கைகளுக்கு எதிராக உபயோகிக்கப்படமாட்டாது, சமூகவிரோத, தேசவிரோத சக்திகளுக்கு எதிராகவே 'பிரதானமாக' பயன்படுத்தப்படுமென்று' விளக்கம் கூறினர்.

ஆனால் இதைத் தொடர்ந்து 'அவசரநிலைமை' நீடிக்க வேண்டிய அவசியத்தைப்பற்றி பிரதம மந்திரி விடாது பேசி வருகிறார். உள்துறை மத்திய அமைச்சர் பிரம்மானந்த ரெட்டியும் நேற்று லோகசபையில் இதை வலியுறுத்தியிருக்கிறார். 1971 இல் 'அவசர நிலைமை பிரகடனம் செய்யப்பட்டபோது வெளிநாட்டு அபாயமென்று 'பாகிஸ்தான் பட்டுமதான் குறிப்பிடப்பட்டது; ஆனால் இப்போது மத்திய அரசின தரப்பில் கூறப்படும் காரணங்களில் கடற்கரை பக்கத்திலிருந்தும் ஆபத்து உண்டென்றும், வடக்கே (சீனத்தின்) ஆபத்தும் உண்டென்றும், இதுபோக பல உள்நாட்டு அபாயங்களும், பல மாநிலங்களில் வறட்சியும், 'வன்முறைச் செயல்கள் தலைதூக்கியிருப்பதும்' — புதிதாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன. பிரதம மந்திரிகள் சொற்பொழிவிலேயே இது உள்ளது.

'அவசரகால நிலைமை அளிக்கும் விசேஷ அதிகாரங்களையும் மிசா சட்டத்தையும் கைவிடாமல் உறுதியாக அமுல் நடத்தி ஜனநாயக உரிமைகளுக்கு விரோதமாக ஆட்சி நடத்தப்படுமென்ற முடிவுக்கே மத்திய அரசு வந்துள்ளது.

'அவசர கால நிலைமை' பிரகடனமான பிறகு 'உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம்' வரவில்லை. அதற்கு முன்பே அது இயற்றப்பட்டு விட்டது. ஆனால் அவசரகால நிலைமையையும் அதோடு பிறந்த இந்தியப்பாதுகாப்புச் சட்டத்தையும் பயன்படுத்தி — உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தில் ஒரு விஷமத்தனமான திருத்தம் செய்யப்பட்டது. அவசர கால நிலைமை நீடிக்கும் வரை உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டமும் அமுலிலிருக்கும் என்பதுதான் அந்தத் திருத்தம். இந்தத் திருத்தத்திற்கு முன்பு 1 வருட காலம் தான் பாதுகாப்பில் இச்சட்டத்தில் வைக்கலாம். இப்போது காலவரையறையின்றி அவசர கால நிலைமை நீடிக்கும் வரை கேட்பாரின்றி சிறையில் பூட்டி வைக்கலாம்.

உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டபோது அரசியல் நோக்கோடு எதிர்க்கட்சிகள் மீது அது பயன்படுத்தப்படாதென்றும், சாமூல தொழிற்சங்க நடவடிக்கைகள் தடுக்கப்படாதென்றும் மத்திய அமைச்சர்கள் பார்லிமெண்டில் வாக்களித்தனர். ஆனால் ரெயில்வே வேலை நிறுத்தத்தை நசுக்குவதற்கு 'மிசா' பிரயோகிக்கப்பட்டதை நாடு அறியும். பீகார் மாநிலத்தில் ஜே. பி. இயக்கத்தைச் சேர்ந்தவர்களும் மார்க்சிஸ்ட் கட்சியினர் பலரும் நூற்றுக்கணக்கில் 'மிசா' சட்டத்தின் கீழ்தான் ஒரு வருடத்திற்கு மேலாக சிறையிலடைக்கப்பட்டிருந்தனர். மேற்கு வங்கத்தில் சுமார் 3700 பேர் இதுவரை 'மிசா' சட்டப்படி சிறையில் உள்ளனர். அவர்களில் கணிசமானவர்கள் மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள். அரசியல் வஞ்சம் தீர்த்துக் கொள்ள இந்தச்சட்டம் ஆளுங்காங்கிரஸ் கட்சியால் பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதில் என்ன சந்தேகம்?

இப்போது 'உள்நாட்டுப்பாதுகாப்புச் சட்டம்' ஒழிய வேண்டுமென்பது மட்டுமல்ல 'அவசரகால நிலைமை'யும், உடனே அகற்றப்படவேண்டும். அது இன்னும் அமுலிலிருக்கும் வரை ஜனநாயக வாழ்க்கை என்பதற்கே இடமில்லை. எதிர்க்கட்சிகளை விலங்கிட்டுவைப்பதற்கே ஆளுங்காங்கிரஸ் இந்த நிலைமையைப் பயன்படுத்தும் வெளிநாட்டு அபாயம் உள்நாட்டுக் கிளர்ச்சி என்று போலிக்காரணங்களைக் கூறிக்கொண்டு.

அவசரகால நிலையும் உள்நாட்டுப்பாதுகாப்புச் சட்டம், இந்தியப்பாதுகாப்பு சட்டம் போன்ற ஆள்தூக்கி அவசரச் சட்டங்களும் அறவே ஒழிக்கப்படுவதற்கு மக்களின் பெருங்கிளர்ச்சி மத்திய அரசை நிர்ப்பந்திக்கவேண்டும்.

## 'சுயவளர்ச்சி'யாளர்களின் திருவோடுயாத்திரை

புதுடெல்லி, ஏப். 29—

சொந்தக் காலில் நிற்போம், சுயவளர்ச்சி அடைவோம் என காலமெல்லாம் கூப்பாடு போட்டு வரும் இந்திரா காந்தியும் அவரதுசிஷ்யர்களும், கடந்த ஆண்டு (1974—75ல்) அன்னிய நாடுகளில் பெற்ற கடன் 154 கோடி டாலருக்கும் மேல் (சுமார் 1200 கோடி ரூபாய்) ஆகும்.

அதுவும் நேருக்கு நேர் சமுத்திரத்திலே சந்திக்கவிருக்கும் எதிரியைப் போல எந்த அமெரிக்காவை உருவகப்படுத்தி இந்திய மக்களிடம் ஏகாதிபத்திய எதிர்ப்பாளியாக அம்மையார் நாடகம் நடத்துகிறாரோ அதே அமெரிக்காவின் தலைமையில் உள்ள உலக பேங்குகளிடமே தனது அதிகபட்சக் கடனை பெற்றுள்ளார்.

மொத்தம் பெற்றுள்ள 1200 கோடி ரூபாய்க் கடனில் திட்ட நடவடிக்கைகளுக்கு 520 கோடி ரூபாயும், திட்டமல்லாத செலவுகளுக்கு 700 கோடியும் செலவழிக்கப்பட்டது. இந்த 700 கோடியில் 140 கோடி ரூபாய் பழைய கடன் தவணையைக் கட்ட செலவழிக்கப்பட்டுள்ளது.

இவ்விவரங்கள் எல்லாம் நிதி அமைச்சகத்தின் வருடாந்திர அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

74—75 ல் வாங்கிய 1200 கோடி ரூபாய் அன்னியக் கடனில் 550 கோடியே 70 லட்ச ரூபாய் முதலாளித்துவ நாடுகளின் விசேஷ நிதி [அமெரிக்க கட்டுப்பாட்டில் உள்ள நிதி] யிலிருந்து வாங்கப்பட்டது. இதனையும் சேர்த்து அமெரிக்க கட்டுப்பாட்டில் உள்ள உலக பேங்க், இந்தியாவுக்கு உதவும் நாடுகள் குழு ஆகியவற்றிடமிருந்து மொத்தம் சுமார் 710 கோடி ரூபாய் வாங்கியுள்ளது.

1974ம் ஆண்டு ஜூன் மாதம் இந்தியாவுக்கு உதவும் நாடுகளின் கூட்டம் பாரிசில் நடைபெற்றது. அதில் இவ்வாண்டுக்கு (1974—75க்கு) சுமார் 1176 கோடி ரூபாய் அன்னியக் கடன் உதவி இந்தியாவுக்கு தேவைப்படும் என முடிவு செய்யப்பட்டது. ஆனால் வாங்கிய கடனோ அதையும் மிஞ்சிவிட்டது.

## மத்திய அரசின் வரிக் கொள்கைகளில் பெருமுதலாளிகளுக்கே சலுகைகள்

### பார்லிமெண்டில் தோழர் தினேன்

புதுடெல்லி, ஏப். 28—

மத்திய அரசின் வரிவிதிப்புக் கொள்கைகள் இந்திய பொருளாதாரத்தை சீரழிக்கும் அன்னியபெருமுதலாளிகளுக்கும், இந்திய பெரு முதலாளிகளுக்கும் உதவிகரமாக உள்ளன என நாடாளுமன்றத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர் தோழர் தினேன் பட்டாச்சாரியா குற்றம் சாட்டினார்.

பொதுத்துறை தொழில்களில் பொதுமக்களை பங்குதாரர்களாக ஆக்குவதற்கு வகை செய்யும் மசோதா மீது விவாதத்தை ஆரம்பித்து மேற்கண்டவாறு பேசினர்.

மேலும், தனியார் துறையினரின் நிர்ணயிக்கப்பட்ட சொத்துக்கள் கடந்த 13 ஆண்டுகளில் 4 மடங்காக பெருகியுள்ளது. 1961ம் ஆண்டில் தனியார் துறை முதலாளிகளின் சொத்துக்கள் 3600 கோடியாக இருந்தது. 73—74ல் 15 ஆயிரம கோடியாகபெருத்து விட்டது எனறும சுட்டிக்காட்டினர்.

#### முதலாளிகட்கு கடன்

மேலும் தோழர், தினேன் பட்டாச்சாரியா பேசுகையில், அரசாங்கம் புதிதாக ஏற்படுத்தியுள்ள லைசென்ஸ் கொள்கைகளில் அன்னிய முதலாளிகளுக்கு அனைத்து சலுகைகளும கிடைக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. பின்தங்கிய பகுதிகளில் ஏகபோக முதலாளிகள் முக்கியத்துவமில்லாத தொழில்களை ஆரம்பித்தாலும் கூட அவர்களுக்கு லைசென்சுகள் வழங்கப்படுகின்றன என்றார்.

அரசாங்க நிதி நிறுவனங்களிடமிருந்து ஏகபோக முதலாளிகள் ஏராளமான கடன் உதவிகள் பெற்றுள்ளனர். ஆனால், தொழிலில் ஏற்படும் லாபத்தை தொழிலில் போடுவதில்லை என்றும் தோழர் பட்டாச்சாரியா குறிப்பிட்டார்.

மேற்கு வங்கத்தில் இஞ்சினியரிங் தொழில்களும் சணல் தொழில்களும் கடும் நெருக்கடியில் சிக்கியுள்ளன. இதன் விளைவாக 30 ஆயிரம் எஞ்சினியரிங் தொழிலாளர்களும் ஆயிரக்கணக்கான சணல் தொழிலாளர்களும் வேலை நீக்கம் கொடுக்கப்பட்டுள்ளார்கள் என்றும் தோழர் தினேன் பட்டாச்சாரியா கூறினர்.

## சிக்கிம் பற்றி மக்கள் சீனத்தின் கருத்து

சிக்கிமை இந்தியா சட்ட விரோதமாக இணைத்துக் கொண்டது. இதனை சீனம் ஏற்றுக்கொள்ளாது என்று சீன அரசாங்கத்தின் அறிக்கையொன்று கூறுகிறது, இத்தகவலை 'இந்து'நாளேடு (ஏப் 30) வெளியிட்டுள்ளது.

இந்நடவடிக்கைக்குப் பின்னல் இந்திய ஏகாதிபத்தியத்தின் தலைவனுக சோவியத் திருத்தல்வாத சமூக ஏகாதிபத்திய வாதிகள் உள்ளனர் என்றும் அந்த அறிக்கை கூறுகிறது.

## கட்டிடத் திறப்பு விழா

கடந்த 13—4—75-ந் தேதியன்று திருநெல்வேலி மகாராஜ நகரில் தோழர் வி பி சிந்தன் திறந்து வைத்த தமிழ்நாடு மின் ஊழியர் சங்க சி ஐ டி யூ அலுவலக புதிய கட்டிடம்.

## கேரள நிலப் போராட்டம் அச்சுதமேனன் ஆட்சியின் அடக்குமுறைத் தாண்டவம்

திருவனந்தபுரம் ஏப் 30—

நிலமீட்புப் போராட்டத்தில் ஈடுபட்ட விவசாயத் தொழிலாளர்கள் மீது அச்சுதமேனன் அரசாங்கம் கடுமையாகத் தாக்குகிறது. பொய் வழக்குப் போடுகிறது

வலது கம்யூனிஸ்ட்—இந்திரா காங்கிரஸ் அரசின் இந்த அடக்குமுறையைக் கண்டித்து, விவசாயிகள் சங்கத்தின் மாநிலச் செயலாளர் தோழர் பி கே குஞ்சச்சன் ஓர் அறிக்கை விடுத்துள்ளார். அதில் கூறியிருப்பதாவது :—

போராட்டம் துவக்கப்பட்ட 17-ம் தேதியன்று கவடியார் கொட்டாரம் வகைக்குச் சொந்தமான உபரி நிலத்தைக் கைப்பற்றிய 12 பேரை போலீஸ் மிருகத்தனமாகத் தாக்கியது. பொய் வழக்குப் போட்டது.

போராட்ட வீரர்கள் இந்த உபரி நிலத்தைக் கைப்பற்றியபோது, அவர்களோடு ஊர்வலமாக வந்த மக்கள் மீது போலீஸ் தடியடி நடத்தியது. கவடியார் கொட்டாரம் உபரி நிலத்தில் தொடர்ந்து போராட்டம் நடந்த ஒவ்வொரு நாளும் போலீஸ் தடியடி நடத்தியது; கைது செய்து தாக்கியது.

கோழிக்கோடு மாவட்ட வட்கரை தாலுகாவில் ஒரு நிலச்சுவான்தார் சட்டத்தை ஏமாற்றி ஒளித்து வைத்திருந்த உபரி நிலத்தைக் கைப்பற்றிய விவசாயத் தொழிலாளர்களை போலீஸ் கடுமையாகத் தாக்கியது.

மாநிலம் முழுதும் கைது செய்யப்பட்ட நூற்றுக்கணக்கான தோழர்கள் சப்-ஜெயிலில் ரிமாண்ட் செய்யப்பட்டுள்ளனர். மற்றும் நூற்றுக்கணக்கான தோழர்களை—அவர்களது முகவரியைக் கேட்டுக் குறித்துக் கொண்டு போலீஸ் அனுப்பி விட்டது. அவர்கள் பின்னொரு சமயம் கைது செய்யப்படுவார்கள் என்று சில போலீஸ் அதிகாரிகள் கூறுகின்றனர்.

அரசாங்கத்தினுடையவும், நிலப்பிரபுக்களுடையவும் எல்லாவிதத் தடைகளையும் உடைத்தெறிந்து மே 1-ம் தேதியன்று மாநிலத்தின் எல்லா உபரி நிலங்களையும் விவசாயத் தொழிலாளர்கள் கைப்பற்றி அதில் தங்கள் உரிமையை நாட்டுவர்; சாகுபடிப் பணிகளை நடத்துவர்.

இவ்வாறு தோழர் குஞ்சச்சன் தமது அறிக்கையில கூறியுள்ளார்.

## மே 10-ல் நாகை வட்ட வி.ச.,வி.தொ.ச. சிறப்பு மாநாடு

நாகப்பட்டினம், ஏப். 30—

நாகை வட்ட விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள்சங்க சிறப்பு மாநாடு வருகிற 10-ந்தேதி தாளங்திருவாசலில் என். வெங்கடாசலம் தலைமையில்நடைபெறுகிறது,

கே. ஆர். ஞானசம்பந்தன் கொடியேற்றிவைத்தும், ஜி. கோவிந்தசாமி வரவேற்றும வி. கே முத்துசாமி மாநாட்டைத் துவக்கி வைத்தும் பேசுவர்.

விவசாயிகள் சங்கத்தின் அகில இந்திய துணைச்செயலாளர் என். சங்கரய்யா, மாநிலத் தலைவர் ஆர். சாமராஜ் செயலாளர்கோ.வீரய்யன; பி. எஸ். தனுஷ்கோடி மற்றும் இயக்க முன்னணி தோழர்களகலந்துகொள்வர் கலைநிகழ்ச்சிகள் இரவில் நடைபெறும்.

இம்மாநாட்டைச் சிறப்புற நடத்திட தோழர்கள் எம். இடும்பையன், கே. வடிவேல்,பி.ஏ. குருசாமி, என். சிவராஜ், பி. ஜி.ராசாங்கம ஆகியோரை நிர்வாகிகளாக கொண்ட வரவேற்புக் குழு தீவிரமாகப் பணியாற்றி வருகிறது.

## வலது கம்யூ. விலிருந்து விலகல்

பல்டைம், ஏப். 30—

இங்கு வலது கம்யூனிஸ்ட் கட்சியில் பரீட் சார்த்த அங்கத்தினராக இருந்துவந்த யூ எஸ். காஜா மைதீன அக்கட்சியிலிருந்து விலகிவிட்டார். தற்போது மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்து செயல்பட விருப்பம் தெரிவித்துள்ளார்.

ஆளும் காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து கொண்டு மாநிலத்துக்கு மாநிலம் மாறுபட்ட கொள்கை வைத்திருப்பதையும், தொழிலாளி வர்க்கத்துக்கு தொடர்ந்து துரோகம் இழைத்து வருவதையும் எதிர்த்தே, தான் அக்கட்சியிலிருந்து விலகிவிட்டதாக தோழர் காஜாமைதீன் குறிப்பிட்டுள்ளார்.

## 'பெருநிலக்காரர்களிடம் கொள்முதல் செய்வதிலிருந்து நழுவுவதாக உள்ளது' முதலமைச்சரின் அறிவிப்பு விவசாயிகள் சங்கம் எதிர்ப்பு

திருவாரூர், ஏப் 30—

"கொள்முதல் சம்பந்தமாக கடந்த 23 ந் தேதி பத்திரிகைகள் மூலம் தமிழக முதலமைச்சர் வெளியிட்டுள்ள அறிவிப்பானது, பெரும் நிலக்காரர்களிடம் கொள்முதல் செய்வதிலிருந்து நழுவுவதாக உள்ளது" என்று இங்கு நடந்த தஞ்சை மாவட்ட விவசாயிகள் சங்க நிர்வாகக் குழுக் கூட்டத்தில் குற்றம் சாட்டப்பட்டது.

இதனால் அரசின் கொள்முதல் திட்டம் தோல்வியடைவதுடன் மக்களுக்குத் திட்டமிட்டபடி உணவு அளிக்கவும் முடியாது என்றும், எனவே 10 ஏக்கருக்கு மேல் உள்ள பெரும் நிலக்காரர்களிடம் உள்ள உபரி நெல் பூராவையும் அரசு கட்டாயக் கொள்முதல் செய்வதுடன் ஆலயங்களில் பதுக்கி வைத்துள்ள நெல் பூராவையும் எடுக்க வேண்டுமென்றும் இக்கூட்டம் வற்புறுத்தியது.

கடந்த 24-ந் தேதி நடந்த இக்கூட்டத்துக்கு மாவட்ட விவசாய சங்கத் தலைவர் தோழர் என் வெங்கடாசலம் தலைமை வகித்தார்.

இக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட மற்ற தீர்மானங்கள் வருமாறு :—

தஞ்சை மாவட்டத்தில் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ள பிரதேசங்களில் அரசினால் தொடங்கப்பட்ட வறட்சி நிவாரணப் பணிகள் என்ன காரணத்தாலோ நிறுத்தப்பட்டிருக்கிறது. இதனால் வறட்சிப் பகுதியிலுள்ள மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவதுடன், வறட்சி சம்பந்தமாக அரசு அறிவித்துள்ளதெல்லாம வெறும் விளம்பரத்துக்குத் தானோ என சந்தேகிக்க இடமளிக்கிறது எனவே, வறட்சிப் பணிகளை அரசே துவக்க வேண்டும். வறட்சிப் பணிகளில் சம்பந்தப்பட்ட கிராமங்களில் உள்ள தொழிலாளர்களுக்கு வேலை கொடுப்பதுடன், தமிழக ஆளுனர் அறிவித்த குறைந்தபட்ச கூலி கிடைக்க அரசு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்.

## தாராபுரம் மில் தொழிலாளர் சங்கப்பேரவை நிர்வாகிகள் தேர்வு

தாராபுரம், ஏப். 30—

இங்குள்ள சி ஐ டி யூ சங்கமான தாராபுரம் தாலுகா டெக்ஸ்டைல் லேபர் யூனியனின் 8-வது ஆண்டுப் பேரவைக்கூட்டம அண்மையில் சங்கத்தலைவர் தோழர் பி. நாச்சிமுத்து தலைமையில் நடந்தபோது புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராக பி. நாச்சிமுத்து. உபதலைவர்களாக எம். நஞ்சப்பன், எஸ். பி. நாச்சிமுத்து, செயலாளராக டி. பி. முத்துச்சாமி, துணைச் செயலாளர்களாக எஸ்.வி. பழனிச்சாமி, என். ஆறுமுகம், பொருளாளராக என். சுப்ரமணியம் மற்றும் 10 பேர் நிர்வாகக்கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மில் தொழிலாளர் பிரச்சினை சுற்றுப்புற கிராம மக்களின் குடிநீர்ப்பிரச்னை, வறட்சி நிவாரண வேலை ஆகியன குறித்து தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கர்நாடக உபதேர்தல் முடிவுகள்

பெங்களூர், ஏப். 30—

கர்நாடக மாநிலத்தில் இரண்டு தொகுதிகளில் இடைத்தேர்தல் நடைபெற்றது பெங்களூர் நகரிலுள்ள சாமராஜ் பேட்டை தொகுதியில் ஜனதா கட்சி (கன்னட் சாலுவாலிகர்) வேட்பாளர் பிரபாகர ரெட்டி வெற்றி பெற்றுள்ளார். ஆளும் காங்கிரஸ் தோல்வியடைந்தது, ஆளும் காங்கிரசுக்கு அதிமுக இத்தொகுதியில் ஆதரவு அளித்தது.

சங்கேஸ்வர் சட்டசபைக்கு நடைபெற்ற இடைத் தேர்தலில் ஆளும் காங்கிரஸ் வேட்பாளர் சர்வாடே வெற்றி பெற்றுள்ளார். எதிர்த்துப் போட்டியிட்டவர்கள் தோல்வியுற்றனர்—பழைய காங்கிரஸ் மேற்கண்ட இரு இடங்களிலும் தோல்வி கண்டது.

## சிகானுக் கம்போடியா தலைவரானர்

பேங்காக், ஏப். 28 —

கம்போடிய நாட்டின் தேசிய காங்கிரசின் சிறப்பு மாநாடு நாம்பென்னில் நடைபெற்றது. அதில் கம்போடிய இளவரசர் சிகானுக்கையே, அந்நாட்டின் அரசாங்கத் தலைவராகவும் தேச விடுதலை முன்னணித் தலைவராகவும் இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டது.

கம்போடிய நாட்டின் தேசிய விடுதலைப் போராட்டத்தில் தீவிர பங்கு கொண்டார் என்பதினால்தான் அவருக்கு இவ்வுயர்பதவி அளிக்கப்பட்டுள்ளதாம்.

## கடத்தல் தொடர்கிறது அமைச்சர் ஒப்புதல்

புதுடெல்லி, ஏப். 29—

மீண்டும் கடத்தல் காரர்கள் சுறுசுறுப்பாக இயங்க ஆரம்பித்துவிட்டார்கள் என மத்திய அரசின் ராஜாங்க நிதி அமைச்சர் பிரணப் முகர்ஜி ராஜ்யசபாவில் ஒப்புக்கொண்டுள்ளார்.

அரசாங்கம் கடத்தல்காரர்கள் மீதும் அன்னிய செலாவணி மோசடிக்காரர்கள் மீதும் எடுத்த தடுப்புக் காவல் நடவடிக்கைகளும் ஏனைய நடவடிக்கைகளும் கடத்தலை கட்டுப்படுத்தியுள்ளதாம். கடத்தல் பொருட்கள் பெருமளவில் பகிரங்கமாக விற்பனையாவது குறைக்கப்பட்டுள்ளதாம்.

## சினிமா தியேட்டர் தொழிலாளர் கிளர்ச்சி

### நிர்வாகத்தின் மிரட்டல் முயற்சி

போடி, ஏப் 30—

இங்குள்ள பொன்னு சினிமா தியேட்டர் தொழிலாளர்கள், பிற துறைகளில உள்ள சகோதரத்தொழிலாளர்களது ஆதரவுடன் சம்பள உயர்வும் இதர சட்ட விதிகளும் கோரி கடந்த 25 ந் தேதியன்று தியேட்டர் முன் பெரும் ஆர்ப்பாட்டம் ஒன்றை நடத்தினர்.

இறுதியில் நடந்த கூட்டத்தில் தோழர்கள் பிரமர், எம சிவனு [மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி), எஸ் நடராஜ் [பொதுத்தொழிலாளர் சங்கம], மல்லிகார்ச்சுனன் (மின் தொழிலாளர் சங்கம்), எம் பாக்கியம்மாள் [மாதர் சங்கம்) பேசினர்.

20—30 வருடங்களாக 23 தொழிலாளர்கள் வேலை பார்க்கும இந்த தியேட்டரில் விலைவாசி உயர்வு மென்னியைப் பிடிக்கும் இக்காலத்தில் மாதம் ஒன்றுக்கு குறைந்தபட்சம 15 ரூபாய் சம்பளம். அதிகபட்ச சம்பளம் 85 ரூபாய் தானும்.

இது இதர தியேட்டர்களில் கொடுக்கப்படும் சம்பளத்தைவிட மிகமிகக் குறைவு. தவிர பிராவிடண்ட் பண்ட், போனஸ் போன்ற வசதிகளும் கிடையாது. எனவே, தங்களது உரிமைகளைப் பெற பெரியகுளம்—உத்தமபாளையம் வட்ட பொதுத் தொழிலாளர் சங்கத்தில் சேர்ந்து மதுரை லேபர் ஆபீசரிடம வழக்குத் தாக்கல் செய்தனர். இதனல் ஆத்திரமுற்ற நிர்வாகம் தனது அடியாட்களை ஏவி தொழிலாளர்களை மிரட்டுவது, வெள்ளைப் பேப்பர்களில் கையெழுத்து வாங்குவது போன்ற சட்டவிரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறதாம்.

எனவே நிர்வாகத்தின் இந்த அக்ரமத்தை எதிர்த்தும் கோரிக்கைகளை வற்புறுத்தியும் இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

## "லே-ஆப்"க்கு முழுச் சம்பளம் மேட்டூர்தொழிலாளர் கோரிக்கை

மேட்டூர், ஏப். 29—

மின்வெட்டு காரணமாக லே-ஆப் காலத்திற்கு முழு ஊதியம வழங்க வேண்டும என்று அரசையும் நிர்வாகத்தையும் மேட்டூர்கெமிக்கல்ஸ் தொழிலாளர் சங்கம் வற்புறுத்தியது.

இச்சங்கத்தின் 32வது ஆண்டுப் பேரவையும் ஆண்டு விழாவும் கடந்த 21-ந் தேதி சேலம் கேம்ப் கல்பனா திரையரங்கில் நடந்தது. சங்கத் தலைவர் எம். சீரங்கன தலைமை வகித்தார். செயலாளர் விகே முருகேசன் சமர்ப்பித்த அறிக்கையும், வரவு-செலவும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

பின்னர் தமிழக சி ஐ டி யூ தலைவர் கே ரமணி சிறப்புரையாற்றினர்.

1975ம் ஆண்டிற்கான புதிய நிர்வாகிகள் தேர்வு நடந்தது.

தலைவராக எம் சீரங்கன், உபதலைவர்களாக ஏ. குழந்தைசாமி, பி அமரப்பன் செயலாளராக விகே முருகேசன், துணைச் செயலாளர்களாக ஆர் சீரங்கன், கே சி நல்லப்பன, பொருளாளராக கே பெருமாள் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

இப்பேரவையில் சங்க அங்கீகாரத்தை நிறுத்தி வைத்திருப்பதை நிர்வாகம் உடனே வழங்க வேண்டும் என்றும, சங்கத்துடன் பேச்சுவார்த்தை நடத்தி சுமுக உறவை வளர்த்துக் கொள்ளும்படியும் வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மாலையில் நடந்த பொதுக்கூட்டத்திலும் தோழர் ரமணி பேசினர்.

## 'என்னை கைது செய்' போலீசிடம் பட்டதாரி கெஞ்சல்

புதுடெல்லியில் நாடாளுமன்றம் முன்பு ஆசிரியர்கள் தங்களது கோரிக்கைகளை வற்புறுத்தி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். அவர்களை போலீசார் கைது செய்து கொண்டிருந்தனர்.

அப்போது 20 வயது மதிக்கத் தக்க ஓர் இளைஞன் போலீசார் முன்பு வந்து நின்றான். தனது இருகைகளையும் நீட்டி, 'என்னையும் கைது செய்யுங்கள்' என்று கெஞ்சினான்.

அவ்வாறு நடந்து கொண்டதற்குக் காரணம் என்னவென்று விசாரித்த போது, நான் ஜெயிலுக்குச் சென்றாலாவது எனக்கு இரு வேளை உணவு கிடைக்கும் அதற்கு உத்தரவாதம் உண்டு. வெளியே இருந்தால் பட்டினி கிடந்து சாகவேண்டியதுதான் என்று சொன்னானும்.

ஆமாம், தயாள்சிங் கல்லூரியில் பயின்ற பட்டதாரியான அந்த இளைஞன் எங்கெங்கெல்லாமோ அலைந்தும் எந்தவொரு வேலையும் கிடைக்கவில்லை.

வேறு என்ன செய்வான் பாவம்!

முன்னாள் ஜனாதிபதி கூறினாரே, வெளியிலிருப்பவனை விட ஜெயிலுக்குள் இருப்பவனுக்கு உணவுக்கு உத்திரவாதம் இருக்கிறது என்று!

எனவே, பார்த்தான் வேறு வழியில்லை — நேராக போலீசிடம் சென்று தன்னையும் கைது செய்யும்படி கெஞ்சத் துவங்கி விட்டான்.

இதுபோல் வெளிவராததுயரக் கதைகள் எத்தனை எத்தனையோ!

ஆதாரம் : 'பேட்ரியாட்' 16-4-75

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில்(6-16 மைனாஸ் ரோடு, மதுரை 625018) அச்சிட்டு வெளியிடுவோர் ஆசிரியர் கே. முத்தையா.